


# குறள் வழி

## திருக்குறள் முற்றோதல் மாத மின்னிதழ்

திருவள்ளுவராண்டு 2055 ஜூலை (ஆடி) - 2024 மலர்: 2 இதழ்: 7

### திருக்குறள் 2030 - இரண்டாம் நிலை




**4**
- திருக்குறளில் மீதம் உள்ள 158 மொழிகளில் மொழிபெயர்ப்பை கொண்டுவர அரசு, தனியார் அமைப்புகளிடம் ஒருங்கிணைப்பு செய்தல்.

**5**
- அச்சில் இல்லாத, எளிதில் தமிழ்நாட்டிலும், குறிப்பிட்ட மொழி பேசும் நாட்டிலும் கிடைக்காத நூல்களை ஆராய்ந்து , ஒருங்கிணைத்து மறுபதிப்பு செய்தல்

**6**
- திருக்குறள் சார்ந்த அனைத்து மொழிபெயர்ப்புகளை யும் ஒரே இடத்தில் கிடைக்கச்செய்தல்

**7**
- சுற்றுலாப் பயணிகள் அதிகம் செல்லும் இடங்களில் திருக்குறள் சார்ந்த நூல்கள் கிடைக்க வழிவகை செய்தல்.

**8**
- திருக்குறள் மொழிபெயர்ப்புகளை பரிசுப்பொருளாக அனைத்து மாநிலங்களும், தூதரகங் களும் பயன்படுத்த வழிவகை செய்தல்.

**9**
- தேசிய நூலாக இந்தியாவும், "Heritage book of Mankind " என்று யுனெசுகோவும் அங்கீகரிக்க குழு அமைத்து ஒருங்கிணைத்தல்














இந்நூலைப் பெற: **www.eStore.ValaiTamil.Com**

அறம் சார்ந்த உங்கள் தொழில் செழிக்க
உங்கள் விளம்பரம் திருக்குறள் புரவலராக
இங்கு இடம்பெறலாம்

**தொடர்புக்கு**
**Email: Kural.Mutrothal@gmail.com**
**WhatsApp: +91 7305571897**

# உலக அளவில் திருக்குறளுக்கென ஒரு சிறப்புப் பதிப்பகம்
# வலைத்தமிழ் பதிப்பகம்

இனி திருக்குறள் நூல்களை ஒரே இடத்தில் உங்களுக்குப் பிடித்தவகையில், பிடித்த உரையை (நாட்டுடைமையாக்கப்பட்டவை) அச்சடித்துப் பெறலாம். நிகழ்ச்சிகளில் பரிசாக வழங்க இவற்றைப் பயன்படுத்தலாம். உலக நாடுகளில் மொழிபெயர்க்கப்பட்ட திருக்குறள் நூல்கள் கிடைப்பதில்லை என்பதை சரிசெய்ய, இந்தியா அமெரிக்காவில் அந்தந்த நாடுகளில் நூல்கள் வெளியிட்டுள்ள பதிப்பகங்களைத் தொடர்புகொண்டு சென்னையிலிருந்து வெளியிட முயற்சி நடக்கிறது. இனி மொழிபெயர்ப்பு நூல்களைத் தேடி ஒவ்வொரு இடமாக அலையவேண்டியதில்லை.

இதற்காக தனித்த கவனம் செலுத்த திருக்குறள் ஆர்வம் கொண்ட குழு அமைக்கப்பட்டுள்ளது.

இந்தியா, அமெரிக்காவிலிருந்து பிற நாடுகளுக்கு அனுப்பவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

## இதுவரை சேர்க்கப்பட்ட நூலகள்:

1. திருக்குறள் Thirukkural: The Holy Scripture, தங்கப்பதிப்பு, சிகாகோ
2. Thirukkural Translations in World Languages
3. நாமக்கல் கவிஞரின் திருக்குறள் எளிய உரை
4. திருக்குறளார் வழங்கும் திருக்குறள் தெளிவுரை
5. Thirukkural Book Custom Printing (You choose any size, any design, any author)
6. திருக்குறள் சமஸ்கிருத மொழிபெயர்ப்பு – இந்திரஜித்

## பிற நூல்கள்:

1. வலைத்தமிழ் பங்களிப்பில் தமிழியக்கம் வெளியிட்ட "சூட்டி மகிழ்வோம் தூய தமிழ்ப்பெயர்கள்" நூல்.

வீடுதோறும் திருக்குறள் நூல் திட்டத்தை முழுமையாக நடைமுறைப்படுத்த திருக்குறளை பரிசுப்பொருளாக பிறந்தநாள் விழா, திருமணம் உள்ளிட்டவற்றில் பயன்படுத்துவோம்.

இணையத்தில் பெற: https://estore.valaitamil.com

# “குறள் வழி” மாத இதழ்

## (தனிச்சுற்றுக்கு மட்டும்)

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் செய்திகளை, செயல்பாடுகளை, நிகழ்ச்சிகளை, திருக்குறள் சார்ந்த உலக முன்னெடுப்புகளை, பரப்புரைகளை தாங்கி மாதம் ஒருமுறை வரும் இதழ்.



## ஜூலை 2024 மாத, "குறள் வழி" முதல் மாத இதழ் உங்கள் வாசிப்பிற்கு

**To Read as a book:** https://www.valaitamil.com/KuralVazhi/ebook.html

**Magazine Page:** http://www.kuralworld.org/kural-vazhi/

**To download as PDF:**

https://drive.google.com/file/d/18tburrnnDW3Yf8_pP7evVha41FzOtvyZ/view?usp=sharing

**உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுத, படைப்புகளை அனுப்ப** : kural.mutrothal@gmail.com

Facebook Page to LIKE and SHARE: https://www.facebook.com/groups/245630171535251

உங்கள் மாவட்டத்தில், உங்கள் அமைப்பில் நடைபெறும் திருக்குறள் சார்ந்த நிகழ்வுகளை எங்களுக்கு அனுப்பவும். மேலும், இவ்விதழ் குறித்த உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுதி அடுத்த இதழில் வாசகர் பகுதியில் இடம்பெறச் செய்யவும்.

# உள்ளே...

1. ஆசிரியர் பக்கம்

2. உலகத் திருக்குறள் இயக்கம் – என்ன செய்கிறது?

3. உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் குறிக்கோள்கள்

4. உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் 2024 இலக்குகள்

5. எங்கள் மாவட்டம் எங்கள் பொறுப்பு

6. தி நியூ இந்தியன் எக்ஸ்பிரஸ் செய்தி

7. மாவட்டச் செய்திகள்

   7.1 நாமக்கல் மாவட்டம்

   7.2 செங்கல்பட்டு மாவட்டம்

   7.3 கடலூர் மாவட்டம்

   7.4 திருவண்ணாமலை மாவட்டம்

   7.5 திண்டுக்கல் மாவட்டம்

   7.6 சென்னை மாவட்டம்

   7.7 மதுரை மாவட்டம்

   7.8 சேலம் மாவட்டம்

8. திருக்குறள் நிகழ்வுகள்

9. திருக்குறள் இன்னும் உலக அளவில் எத்தனை மொழிகளில் மொழிபெயர்க்கப்பட வேண்டும்?

10. திருக்குறள் நூல்கள் – அறிமுகம்

11. நவில்தொறும் நூல்நயம்

12. திருக்குறள் 2030 – நிலை 2

13. தேடப்படும் திருக்குறள் மொழிபெயர்ப்பு நூல்கள்

14. திருக்குறள் புரவலர்களுக்கு நன்றி

15. முற்றோதல் இயக்கத்திற்குப் புதிய இணையதளம்

# ஆசிரியர் பக்கம்

**திருக்குறள் ஆர்வலர்களுக்கு வணக்கம்,**

குறள் வழி பத்தாவது இதழ் வழியே உங்களைச் சந்திப்பதில் மிக்க மகிழ்ச்சியடைகிறேன். திருக்குறள் முற்றோதல் இயக்கம் மாவட்ட ஆளுமைகளுடன் இணைந்து ஒவ்வொரு அடியாக முன்னேறி வருகிறது. குறிப்பாகப் புதிய மாவட்டப் புரவலர்கள் இணைந்து வருகிறார்கள், புதிய மாவட்டப் பயிற்சியாளர்கள் இணைந்து வருகிறார்கள். இதுமட்டுமல்லாது உலக அளவில் திருக்குறள் பரவலாக்கல் நடைபெற அமெரிக்கா, சௌதி அரேபியா, மலேசியா உள்ளிட்ட நாடுகளில் திருக்குறள் ஆர்வலர்கள் அடையாளம் காணப்பட்டு அங்கு நம் சேவையை விரிவாக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

புதிய இணையதளம் www.KuralWorld.org தொடங்கப்பட்டு பயிற்சி ஆசிரியர்களுக்கு அடையாள அட்டை வழங்கும் பணி தொடங்கப்பட்டுள்ளது. புதிய நூல்கள் அச்சடிக்கும் பணி சென்றுகொண்டுள்ளது. இப்படி நம்பிக்கையளிக்கும் பல்வேறு பணிகள் தொடர்ந்து வளர்ச்சியை நோக்கிச் சென்றுகொண்டுள்ளது.

மேலும், திருக்குறளுக்கு என்று ஒரு தனித்த பதிப்பகமாக வலைத்தமிழ் பதிப்பகம் தொடங்கப்பட்டுச் சிறப்பாக இதுவரை ஏழு நூல்களை இணையத்தில் வாங்க https://estore.valaitamil.com இங்கே பட்டியலிடப்பட்டுள்ளது. தற்போது இந்தியா, அமெரிக்காவிலிருந்து நூல்களைப் பெற வசதி செய்யப்பட்டுள்ளது.

எந்தெந்த மாவட்டங்கள் தொய்வாக, உரிய பொறுப்பாளர்கள் இல்லை என்பதை அடையாளம் கண்டு அங்குப் புதியவர்களை அடையாளம் காணும் பணி தொடங்கியுள்ளது. குறிப்பாக நம் தலைமைப் பயிற்சியாளர் திரு.பழனி அவர்கள் இதற்குப் பொறுப்பேற்று ஒவ்வொரு மாவட்டத்தையும் ஆராய்ந்து வருகிறார்.

இந்தத் தரமான இதழைக் கொண்டுவரத் தொடர்ந்து விளம்பரங்கள் அளித்து அச்சடித்து அதிகமானவர்களுக்குக் கொண்டுசேர்க்க உங்கள் தொடர்பில் உள்ள வணிக நிறுவனங்களைத் தொடர்புகொண்டு உதவவும்.

தொடர்ந்து பயணிப்போம்.

தொடர்ந்து உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுதுங்கள்.

திட்ட ஒருங்கிணைப்பாளர்,

**வலைத்தமிழ் *ச.பார்த்தசாரதி,***



## உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் - என்ன செய்கிறது?

உலகப் பொதுமுறையாம் திருக்குறளை இளம் வயதிலேயே மாணவ மாணவியர் மனப்பாடம் செய்தால் வாழ்நாள் முழுவதும் மனத்தில் நிற்கும். "இளமையில் கல்வி பசுமரத்தாணி" என்பது பழமொழி.

திருக்குறள் மனித இனத்தின், குறிப்பாகத் தமிழர்களின் மாபெரும் பொதுவுடைமைச் சொத்து. திருக்குறள் நெறிகள் பரவப்பரவ, அறம் பரவும். தமிழ் மொழிப்பயிற்சியும், மாணவர்களுக்குக் கிடைக்கும். அறமும், மொழியும் வளரும். மேலும் அறமும், திறனும், ஒருங்கே வாய்ந்த இளைஞர் சமுதாயம் உருவாகிட வலுவான அடித்தளமாகத் திருக்குறள் மனனம் அமையும். சமுதாயத்தில் நல்லிணக்கமும், மனித நேயமும் வளரும்.

திருக்குறள் பொருள் பொதிந்த, பொருள் நிறைந்த, இகலில்லா இன்ப வாழ்க்கையின் கையேடு.
கிட்டத்தட்ட 20 ஆண்டுகளுக்கும் மேலாக, 1330 திருக்குறளையும் மனப்பாடம் செய்து ஒப்பிக்கும் மாணவ மாணவியரை ஊக்குவிக்கும் வகையில் தமிழக அரசு சான்றிதழ் மற்றும் பரிசுத் தொகை வழங்கி வருகிறது. திருக்குறள் முற்றோதல் செய்யும் 70 மாணவர்களுக்கு, 2021 ஆம் வருடம் வரை, தலா ரூ.10000/- திருவள்ளுவர் தினத்தன்று அரசு வழங்கி வந்தது.

இந்தச் சூழ்நிலையில் தமிழக அரசு 2022 ஆம் ஆண்டு சட்டசபையில் 70 மாணவர்கள் என்ற உச்சவரம்பை நீக்கியது. பரிசுத்தொகையும் உயர்த்தப்படும் என்று மாண்புமிகு தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் சட்டசபையில் அறிவித்தார். {தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை. தமிழ் வளர்ச்சி மானியக் கோரிக்கை - 46 அறிவிப்புகள் (2021-2022)}. கடந்த 20 ஆண்டுகளுக்கும் மேலாக இதுவரை ஆண்டுதோறும் பரிசு பெறும் மாணவர்களின் வயதைப் பார்த்தால் 95 விழுக்காடு மாணவ/மாணவியர் 14 வயதுக்குட்பட்டே இருக்கிறார்கள். ஆறு/ஏழாம் வகுப்புக்குள் மனனம் செய்துவிட்டால், பிறகு மேல் வகுப்புகளில் பொருளுணர்ந்து படிக்க ஏதுவாக இருக்கும். தனிவாழ்வில் நிறைவான வாழ்க்கை வாழவும், சமுதாய பிரச்சனைகளைத் திருக்குறள் துணையுடன் எதிர் கொள்ளவும், இளவயதிலேயே 1330 அருங்குறள் மனனம் பயனுள்ளதாக இருக்கும்.

இந்தப் பின்புலத்தில், வலைத்தமிழ், வள்ளுவர் குரல் குடும்பம், சர்வீஸ் டு சொசைட்டி என்ற மூன்று அமைப்புகளும் இணைந்து, தமிழ்நாடு, புதுச்சேரியில் ஏற்கனவே திருக்குறள் முற்றோதல் பயிற்சியளிக்கும் ஆசிரியர்களை ஒருங்கிணைத்து, ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு ஒருங்கிணைப்பாளர், ஒரு பயிற்சியாளர், ஒரு புரவலர் அடையாளம் கண்டு அக்டோபர் 2021ல் தொடங்கப்பட்டது இவ்வியக்கம். எம்முடன் உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், USA இணைந்து ஒரு மாவட்டத்திற்கு 1000 திருக்குறள் நூல்கள் வீதம் ஒரு ஆண்டுக்கு 40,000 திருக்குறள் நூல்களையும், பத்து ஆண்டுகளுக்கு மொத்தம் 4 லட்சம் நூல்களையும் அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசமாக வழங்க முன்வந்தது. முதல் ஆண்டு வெற்றிகரமாக நூல்களை வழங்கி இரண்டாம் ஆண்டில் அடியெடுத்து வைக்கிறோம்.

### உங்கள் மாவட்ட திருக்குறள் பரப்புரை தேவைகளுக்குப் பொறுப்பேற்கத் திருக்குறள் புரவலர்களை அழைக்கிறோம்.

*உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. ஒவ்வொரு மாவட்டத்திலும் அந்த மாவட்டத்தைச் சார்ந்த திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர் ஒருவரை அடையாளம் கண்டு அல்லது உருவாக்கி பகுதிநேர-முழுநேரத் திருக்குறள் பயிற்சி வழங்க ஊக்கத்தொகை, மாணவர்களுக்குச் சான்றிதழ் அச்சடித்தல், "குறள் வழி" இதழுக்கு விளம்பரம் கொடுத்து இலவச இதழ்களை அனுப்ப உதவுதல் என்று சுயமாக உங்கள் மாவட்டத்தில் பொறுப்பேற்க அழைக்கிறோம். ஊர் கூடிப் பயணிக்கும் திருக்குறள் தேரை இழுக்க வடம் பிடிக்க வாருங்கள். எமக்கு அறம் சார்ந்த வணிகர்கள் அவர்கள் தொழில்களை விளம்பரம் செய்து உங்கள் மாவட்டத்தில் திருக்குறள் பரப்புரைக்கு உதவலாம்.*




# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் குறிக்கோள்கள்

1) தமிழ்நாடு அரசின் புதிய அறிவிப்பைத் (மாணவர் எண்ணிக்கை உச்ச வரம்பு ஏதுமில்லை, பரிசுத் தொகை உயர்வு) தொடர்ந்து, 1330 திருக்குறள் பாக்களையும் மனனம் செய்யும் மாணவர்களை அதிக அளவில் உருவாக்கி, அரசு விருதும், பரிசுத்தொகையும் பெற வைப்பது.

2)பள்ளித் தலைமை ஆசிரியர்கள், ஆசிரியர்கள், பெற்றோர்களுடன் இணைந்து செயல்பட்டு ஆர்வமும் மனனம் செய்யும் திறனும் மிக்க மாணவர்களை இனம் கண்டு, அவர்களுக்குத் திருக்குறள் மனனப் பயிற்சியை 3-ஆம் வகுப்பிலிருந்து 8-ஆம் வகுப்புக்குள் அளித்தல். அவர்களுக்கு அரசு விருது மட்டுமின்றி உலகத் திருக்குறள் இயக்கத்தின் சார்பாகத் "திருக்குறள் முற்றோதல்-இளநிலை" சான்றிதழ் வழங்குதல்.

3) முற்றோதல் முடித்த அனைவரும் கல்லூரி செல்வதற்கு முன்பு முழுமையாகக் குறளின் பொருளை அறிந்துகொள்ள வழிசெய்தல். அதில் நேர்முகத் தேர்வு வைத்து பொருள் உணர்ந்து கற்றவர்களுக்குத் "திருக்குறள் முற்றோதல் – முதுநிலை" சான்றிதழ் வழங்குதல்.

4) திருக்குறள் முற்றோதல் பயிற்றுவிக்க, தமிழ்நாட்டின் அனைத்து மாவட்டங்களிலும் தகுதியும், அனுபவமும், ஆர்வமும் மிக்க முற்றோதல் முடித்த பயிற்சியாளர்களை அடையாளம் கண்டு பயிற்சியாளராக்கவும், அந்தப் பயிற்சியாளருக்கு மாதந்தோறும் ஊக்கத்தொகை வழங்க ஒரு புரவலரையும், மாவட்ட ஒருங்கிணைப்புப் பணிக்காக ஓர் ஒருங்கிணைப்பாளரையும் நியமித்தல்.

5) ஒவ்வொரு ஆண்டும் திருவள்ளுவர் நாளில் அந்தந்த மாவட்டங்களில் திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள் அனைவரும் மாவட்டத்தில் உள்ள ஒரு குறிப்பிட்ட திருவள்ளுவர் சிலையின் முன்பு ஒன்றுகூடி, தமிழ் வளர்ச்சித்துறை, மாவட்ட நிர்வாகம், பள்ளி, கல்லூரிகள், பொதுமக்கள் இணைந்து குழுவாக "திருக்குறள் முற்றோதல்" செய்து, கற்றதை மறந்துவிடாமல் இருக்க வழிசெய்தல்.

6) குறள் முற்றோதல் முடித்த அனைவரின் விவரங்களையும் இணையத்தில் பட்டியலிட்டு (https://www.valaitamil.com/mutrothal-students-register-list.php), வரிசை எண் கொடுத்து, அவர்கள் ஒருங்கிணைந்த வளர்ச்சியைப் பெற துணை நிற்றல்.

7) குறள் முற்றோதல் முடித்த அனைவரும் ஒருவருக்கொருவர் துணை நின்று உரிய கல்வி பெற்று மகிழ்ச்சியான, நிறைவான வாழ்க்கையை வாழவும், வேலைவாய்ப்பில், தொழிலில் வெற்றிபெறவும் முன்னுரிமை கொடுத்து அவர்களுக்கு உரிய உதவிகளைப் பெறவும் துணைநிற்றல்.

8) திருக்குறள் முற்றோதல் முடித்த மாணவர்களுக்கு அரசு வேலைவாய்ப்பில் 5% முன்னுரிமை வழங்க கோரிக்கை வைத்து அதனை அடைய முயற்சி மேற்கொள்ளப்படும். தமிழ் அமைப்புகள் வழியே மாணவத் தூதர்களாக வெளிநாடு வாய்ப்புகளை ஏற்படுத்த முயற்சி மேற்கொள்ளப்படும்.

9) அனைத்து பள்ளிகளிலும் காலையில் திருக்குறள் மறையோதி தொடங்க அரசுக்கு பரிந்துரைத்து, அனைத்துத் தமிழ் நிகழ்வுகளிலும் திருக்குறள் மறையோதி நிகழ்ச்சியைத் தொடங்குவதை நடைமுறையில் கொண்டுவர முயற்சி செய்யப்படும்.

10) இதுவரை வெளிவந்துள்ள திருக்குறள் மொழிபெயர்ப்புகள், உரைநூல்கள் மட்டுமல்லாது, திருக்குறள் சார்ந்த அனைத்து விதமான நூல்களையும் தொகுத்து உலகத் திருக்குறள் ஆராய்ச்சி மையம் ஒன்றை மயிலாடுதுறையில் உருவாக்கி அதில் திருக்குறள் கண்காட்சி, நூலகம், மின் நூலகம், அரங்கங்கள் என்று அமைத்து அதை தமிழ்க் கட்டிடக்கலை கலைநயத்துடன் அமைக்க முயற்சிக்கப்படும்.

www.KuralWorld.org | Kural.Mutrothal@gmail.com






# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

**அரசுப் பள்ளி மாணவர்களுக்கு 1330 திருக்குறள் இலவச மனனப் பயிற்சி**

(வெற்றிகரமாக முடிக்கும் மாணவர்களுக்குப் பயிற்சி சான்றிதழும், அரசின் முற்றோதல் திட்டத்தில் பங்கேற்க வாய்ப்பும்)

## மாவட்டப் பயிற்சியாளர்கள்

செங்கல்பட்டு

திருமதி. பி. கற்பகவள்ளி
+91 99525 73398

அரியலூர், புதுச்சேரி

திருமதி. சங்கீதா கண்ணன்
+91 78718 39331

திண்டுக்கல்

திரு. வெ.செல்வன்
+91 97884 25501

தஞ்சை

திருமதி. ச. ஆனந்தி
+91 96008 90134

காஞ்சிபுரம்

திரு. குறள் அமிழ்தன்
+91 93643 23915

காரைக்குடி

திரு. மெ.செயம்கொண்டான்
+91 9865 455036

நாமக்கல்

முனைவர். எ.திருமலை ராஜா
+91 9952 822535

செங்கல்பட்டு

திருமதி. செ.சிந்தாமணி
+91 95976 90745

அரியலூர்

திருமதி. சூரியகலா
+91 80985 79762

திண்டுக்கல்

திருமதி. பி. கௌரி பிரபாகரன்
+91 96008 90134

## தலைமைப் பயிற்சியாளர்கள்


திருக்குறள் தூயர்
திரு. அ. கோபி சிங்
திருக்குறள் முற்றோதல் பயிற்றகம், தஞ்சாவூர்
+91 88385 11065


திரு. க. கோ. பழனி
திருவள்ளுவர் கல்வி மன்றம், சென்னை
+91 98944 59052


திருக்குறள்
திரு. க. காமராசு
உலகத் திருக்குறள் முற்றோதல் மையம், திருவண்ணாமலை
+91 63802 78863


கவிஞர் தமிழ்க்குழவி
திருக்குறள் வாழ்வியலாக்கப் பயிற்சி மையம், நாகர்கோவில்
+91 9442580620

**மாவட்டத்திற்கு 1000 திருக்குறள் நூல்கள் வீதம்**
**ஆண்டுக்கு 40000 திருக்குறள் நூல்களை**
**அடுத்த பத்து ஆண்டுகளுக்கு இலவசமாக வழங்குவோர்:**
**உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், USA**

## ஒருங்கிணைப்பாளர்கள்

திட்ட ஒருங்கிணைப்பு

திரு. ச. பார்த்தசாரதி
ஆசிரியர், வலைத்தமிழ்
வலைத்தமிழ் www.ValaiTamil.com

அரசு மற்றும் பயிற்றுநர் ஒருங்கிணைப்பு

திரு. சி. இராஜேந்திரன், IRS (ஓய்வு),
ஒருங்கிணைப்பாளர், வள்ளுவர் குரல் குடும்பம்
வள்ளுவர் குரல் குடும்பம்

அரசுப் பள்ளிகள் ஒருங்கிணைப்பு

திரு. இரவி சொக்கலிங்கம்,
நிறுவனர், S2S அறக்கட்டளை

புரவலர் ஒருங்கிணைப்பு

திரு. கொழுந்தவேல் இராமசாமி
Washington DC, USA


திரு. க.செங்குட்டுவன்
திருக்குறள் ஆர்வலர், இந்தியா

திரு. செந்தில் துரைசாமி
திருக்குறள் ஆர்வலர், Texas,USA

### பயிற்சி விவரங்களுக்கு

E-Mail: kural.mutrothal@gmail.com
Web: www.KuralWorld.org
WhatsApp: +91 73055 71897

**முற்றோதல் முடித்தவர்கள் பதிவு செய்ய**



# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் 2024 இலக்குகள்




- மாவட்டங்களில் பயிற்சிகளை விரிவாக்குதல். மாவட்டத்திற்கு 100 மாணவர்கள் முற்றோதல் பயிற்றுவிக்கும் இலக்கை நோக்கி நகர்தல்.
- தமிழ்நாடு அளவில் 124 என்ற தற்போதைய எண்ணிக்கையைக் குறைந்தது 1000 ஆக உயர்த்துதல்.
- குறள் வழி இதழை நிலைநிறுத்தி, பதிவு செய்தல்.
- மாவட்ட அளவில் புரவலர், பயிற்சியாளரை விரிவாக்குதல்.
- தொய்வு உள்ள சில மாவட்டங்களில் கவனம் செலுத்தி பலப்படுத்துதல்.
- முற்றோதல் ஆசிரியர் பயிற்சிக் கட்டமைப்பை உருவாக்குதல், பயிற்சியைத் தரப்படுத்தல்.
- 25 ஆண்டுக்கால 1200+ முற்றோதல் முடித்தவர்களைத் தொகுத்து மாவட்டம், பயிற்சியாளர், நாடு வாரியாக இணையத்தில் வெளியிடுதல்.
- முற்றோதல் முடித்தவர்களுக்கு அதிக வாய்ப்புகளை ஏற்படுத்தி முன்னுரிமை அளித்தல்.
- மாவட்ட அளவில் 2024 இறுதியில் திருவள்ளுவர் நாளில் மாவட்ட அளவில் குழுவாக முற்றோதல் செய்யவைத்தல்.
- திருக்குறள் ஆளுமைகளைத் தொகுத்து வெளியிடுதல்.
- 25 ஆண்டுகளாக முடித்தவர்களுக்கு முற்றோதல் இளநிலை சான்றிதழ் வழங்குதல்.
- முற்றோதல் – முதுநிலை நேர்முகத் தேர்வுக்குப் பாடத்திட்டம் வரையறை செய்து பயிற்சிக் கையேடு வெளியிடுதல்.
- மாவட்ட அளவில் திருக்குறள் சார்ந்த ஆளுமைகள், ஆர்வலர்களை மாவட்டக் குழுவில் சேர்த்தல். அனைவரும் ஒருங்கிணைந்து
- குழுவாகக் கைகோர்த்துச் செயல்படுதல்.
- உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், தமிழிருக்கைக் குழுவுடன் இணைந்து 40000 திருக்குறள் நூல்களை அரசுப்பள்ளி மாணவர்களுக்குக் கொண்டுசேர்த்து பயிற்சியை வழங்குதல்.




## திருக்குறள் தற்சார்பு : எங்கள் மாவட்டம்–எங்கள் பொறுப்பு

எங்கள் மாவட்ட மாணவர்களுக்கு, எங்கள் மாவட்டத்தில் படித்த ஒருவருக்கு வேலைவாய்ப்பை ஏற்படுத்தி பயிற்சியாளராக்கி, எங்கள் மாவட்டத்தில் அறம்சார் தொழில் செய்பவர்களைப் புரவலர்களாகக் கொண்டு, எங்கள் மாவட்ட வெளிநாடுவாழ் தமிழர்களின் துணையோடு திருக்குறள் முற்றோதல் பயிற்சியை வழங்கி, உயர்நெறியுடன் கூடிய மாணவர்களை உருவாக்குவோம். திருக்குறள் முற்றோதல் முடித்த மாணவர்களாக ஆண்டுக்கு நூறுபேரை உருவாக்கி எங்கள் மாவட்ட அரசு நிர்வாகத்துடன் இணைந்து தமிழ்நாடு அரசு வழங்கும் ரூபாய் 15000 விருதையும், முற்றோதல் சாதனை சான்றிதழையும் பெற உழைப்பது நமது இலக்காகும். திருக்குறள் கற்றுத்தேர்ந்து இளநிலை மனப்பாடம், முதுநிலை பொருள் உணர்தல் என்று இருநிலைகளைக் கடந்த மாணவர்களுக்கு கல்வி, வேலைவாய்ப்பு, தொழில்வாய்ப்பு, வெளிநாட்டு வாய்ப்புகள் என்று பல்வேறு வாய்ப்புகளை ஏற்படுத்தி, திருக்குறளை முழுதும் படித்தவர்களுக்கு முன்னுரிமை வழங்குவோம். அரசு பெரும்தொகை பரிசு வழங்கினாலும் திருக்குறள் கற்க முன்வராத நிலையை மாற்றுவோம்

அன்பார்ந்த தமிழ்நாடு வாழ், வெளிநாடுவாழ் அன்பர்களே.. தமிழ்நாட்டில் ஆகச்சிறந்த ஒரு செயலை செய்யவேண்டுமானால் அது தனிமனித மாற்றம்தான். அவர்களை நற்சிந்தனையுடன், சமூகப்பொறுப்புடன் உருவாக்கிவிட்டால் அவர்கள் தாங்கள் பிறந்த ஊரை, மாவட்டத்தை, மாநிலத்தை, நாட்டை பெருமைகொள்ளச் செய்வார்கள். எனவே சமூக அக்கறைகொண்ட உங்களை உங்கள் மாவட்டத்தில் திருக்குறள் படித்த மாணவர்கள் உருவாக, முற்றோதல் ஆசிரியர்கள் உருவாக அன்புடன் அழைக்கிறோம்

## ஏற்கனவே பொறுப்பேற்றுள்ள புரவலர்களுக்கு நன்றி...!! நன்றி.. !!

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. செயல்பாடுகளை கண்டறிந்து அறம் சார்ந்த மனிதர்கள், நிறுவனங்கள் அந்தந்த மாவட்டத்திலிருந்து அவர்கள் சார்ந்த மாவட்டத்தின் புரவலர் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று வலியுறுத்துகிறோம். மாணவர்களுக்கு சான்றிதழ் வழங்குதல், பரிசளித்தல், பகுதிநேர, முழுநேர திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர்களுக்கு ஊக்கத்தொகையை நேரடியாக வழங்குதல் உள்ளிட்டவற்றிற்கு அந்தந்த மாவட்டத்தை சார்ந்தவர்கள் பொறுப்பேற்றுக்கொள்ளுங்கள்.

**Mayiladuthurai**
**மயிலாடுதுறை**





திரு. ஜெனிபர் பவுள்ராஜ்

**Chengalpattu**
**செங்கல்பட்டு**



திரு. மணி பெரியகருப்பன்,
ஓகாயோ , அமெரிக்கா

**Salem**
**சேலம்**



முனைவர். தங்கராசு பெரியசாமி

**Karur**
**கரூர்**




திரு. க. செங்குட்டுவன்,
தாளாளர்
Valluvar Science & Management College

**Thiruvarur**
**திருவாரூர்**



திரு. இளங்கோ,
சிங்கப்பூர்

**Pondicherry**
**புதுச்சேரி**



முனைவர். வி. முத்து
தலைவர்,
புதுவைத் தமிழ்ச்சங்கம்

**Dindigul**
**திண்டுக்கல்**



திரு. பாஸ்கர் குமரேசன்,
வெர்சீனியா, அமெரிக்கா

**Thanjavur**
**தஞ்சாவூர்**



திரு. வீ. இளவழுதி,
வெர்சீனியா, அமெரிக்கா

**Ramanathapuram**
**இராமநாதபுரம்**



திரு. மருதுபாண்டியன்,

**பிற தேவைகள் உள்ள மாவட்டங்கள்:** அரியலூர், ஈரோடு, உதகமண்டலம், கடலூர், கள்ளக்குறிச்சி, காஞ்சிபுரம், கிருஷ்ணகிரி, கோயம்புத்தூர், சிவகங்கை, செங்கல்பட்டு, சென்னை, தர்மபுரி, திருச்சி, திருநெல்வேலி, திருப்பத்தூர், திருப்பூர், திருவண்ணாமலை, திருவள்ளூர், தூத்துக்குடி, தென்காசி, தேனி, நாகப்பட்டினம், நாகர்கோயில், புதுக்கோட்டை, பெரம்பலூர், மதுரை, ராணிப்பேட்டை, ராமநாதபுரம், விருதுநகர், விழுப்புரம், வேலூர்

## உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தைக் குறிப்பிட்டு வந்துள்ள தி நியூ இந்தியன் எக்ஸ்பிரஸ் செய்தி

தி நியூ இந்தியன் எக்ஸ்பிரஸ் செய்தித்தாளில் 10.06.2024 அன்று வெளிவந்துள்ள திருக்குறள் கட்டுரை உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தையும், திருக்குறள் முற்றோதல் செய்த அமெரிக்காவின் மின்னசோட்டா மாகாணத்தின் செல்வி. அத்விகாவை குறிப்பிட்டும் வந்துள்ள ஆங்கிலக் கட்டுரை.

மாணவர்கள், இளைஞர்கள், தமிழ்நாட்டுக்கு வெளியே திருக்குறளைக் கற்றுணர வலியுறுத்தும் கட்டுரை.

இக்கட்டுரை, திருக்குறளில் உலக மக்களுக்குத் தேவையான பல்வேறு தீர்வுகள் உள்ளதையும், இளைஞர்கள் வாசிக்கவேண்டியதன் அவசியத்தையும் வலியுறுத்துகிறது.

தேசிய நூல், யுனெசுகோ அங்கீகாரம் குறித்தும் தொட்டுச் செல்கிறது.

**நன்றி: தி நியூ இந்தியன் எக்ஸ்பிரஸ்**

# மாவட்டச் செய்திகள்

## நாமக்கல் மாவட்டம்

21 ஜூன் 2024: இராசிபுரம் பாவை கல்வி நிறுவனங்களின் தலைவர் திரு.நடராசன், மற்றும் அவரின் துணைவியார் பாவை கல்வி நிறுவனங்களின் தாளாளர் திருமதி.மங்கையர்க்கரசி நடராசன் அவர்கள் நாமக்கல் மாவட்டம் வெள்ளக்கல்பட்டி ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி மாணவி தவப்பிரியா திருக்குறள் முற்றோதல் செய்ததைப் பாராட்டி, பரிசுகளையும் நூல்களையும் வழங்கினர். உடன் பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு.சுந்தரம் மற்றும் 600 குறள்களைப் படித்துள்ள பள்ளியின் மற்றொரு மாணவி ரிஷிபா.

உலகத்திருக்குறள் முற்றோதல் மையத்தின் மண்டலப் பயிற்சியாளர் திருக்குறள் காமராசு ஐயா இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் முற்றோதல் பயிற்சியை வெள்ளக்கல்பட்டி பள்ளியில் தொடங்கி வைத்தார். தற்போது பல மாணவர்கள் 500 குறளுக்கும் மேல் படித்துள்ளார்கள். அவர்களில் எட்டாம் வகுப்பு மாணவி தவப்பிரியா இந்த ஆண்டு பிப்ரவரியில் நாமக்கல் மாவட்ட தமிழ் வளர்ச்சித்துறை அலுவலர் முன்னிலையில் 1330 குறள்களையும் ஓதி தமிழக அரசின் சான்றிதழையும் பரிசையும் பெற்றுள்ளார்.

உலகத்திருக்குறள் முற்றோதல் மையத்தின் நோக்கம் மற்றும் செயல்பாடுகளை விளக்கி திரு. பாவை நடராசன் அவர்களுக்கு "குறள்வழி" மாத இதழை வழங்கினோம். திருமதி மங்கை நடராசன் அவர்களுக்கு உலகமொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்புகளைப் பற்றிய தொகுப்பு நூலான "Thirukkural Translations in World Languages" (வலைத்தமிழ் வெளியீடு) என்ற ஆங்கில நூலைப் பரிசளித்தோம்.

# செங்கல்பட்டு மாவட்டம்

செங்கல் பட்டு, திருப்போரூர் ஊராட்சி தொடக்கப் பள்ளி 4 மற்றும் 5 வகுப்பு மாணவச் செல்வங்கள் 25 குழந்தைகள் திருக்குறள் கற்கப் பள்ளி தலைமை ஆசிரியர் முயற்சியில் சேர்ந்தார்கள்.

நமது உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் திருவள்ளுவர் கல்வி மன்றத்தின் பரப்புரை மாநாடு நடத்தியதின் பலன் தென் சென்னை & திருப்போரூர் ஒன்றியம் பள்ளி ஆசிரியர்கள் மனதில் ஒரு ஊக்கம் ஏற்பட்டுள்ளது.



திருவள்ளுவர் கல்வி மன்றத்தின் 10ஆம் ஆண்டு நிறைவு விழாவை முன்னிட்டு தென் சென்னை, திருப்போரூர் திருக்குறள் பரப்புரை மாநாடு 16.06.2024 (ஞாயிற்றுக்கிழமை) கேளம்பாக்கம் சமுதாயநலக் கூடத்தில் நடைபெற்றது.

27.06.2024 அன்று சென்னை, நன்மங்கலம் தாகூர் பதின்ம மேனிலைப்பள்ளியில் திருக்குறள் முற்றோதல் வகுப்பு தொடங்கப்பட்டது.

**தாகூர்**

**மெட்ரிக் மேனிலைப் பள்ளி**

(Recognised by Govt. of Tamilnadu)

எண்.2/212, ஏழுமலை சாலை, நன்மங்கலம், சென்னை - 600 129.

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு"

**"ஔவை தமிழ் இலக்கிய மன்றம்**
**மற்றும்**
**திருக்குறள் பயிற்றுவித்தல் வகுப்பு**
**தொடக்க விழா"**

நாள் - 27/06/2024 வியாழக்கிழமை
நேரம் - பிற்பகல் 02.00 மணி.
இடம் - தாகூர் மெட்ரிக் மேனிலைப் பள்ளி.

தலைமை

முனைவர். **கோ.பெரியண்ணன்.**

பயிற்றுவிப்போர்

திருமதி.**பி.கற்பகவள்ளி** மற்றும் திருமதி.**செ.சிந்தாமணி,**

பள்ளி முதல்வர்

திருமதி.**ச.கன்னிகாபரமேஸ்வரி** M.Com., B.Ed.,











# கடலூர் மாவட்டம்

## மேட்டுக்குப்பம் அரசு உயர்நிலை பள்ளியில் திருக்குறள் திருவிழா

வடலூருக்கு அருகில் உள்ள மேட்டுக்குப்பம் அரசு உயர்நிலைப் பள்ளியில் இன்று திருக்குறள் திருவிழா வெகு சிறப்பாக நடைபெற்றது.

பள்ளியின் தலைமை ஆசிரியர் திருப்பதி வெங்கடேசன் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார்.

தமிழ் ஆசிரியர் ஏ.கே.அருள்மதி அவர்கள் அனைவரையும் வரவேற்று வரவேற்புரை நிகழ்த்தினார்.

விழாவில் உலகத் திருக்குறள் பேரவையின் மாவட்டத் தலைவர் தமிழ் அரிமா பா.மு.பாஸ்கரன் அவர்கள் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டார். ஆசிரியர்கள் தினேஷ், அலெக்ஸ் ஆகியோர் திருக்குறள் ஒப்பித்தல் போட்டியில் வெற்றி பெற்ற மாணவர்களைத் தேர்வு செய்தனர்.

உலக திருக்குறள் பேரவையின் மாவட்டத் தலைவர் தமிழ் அரிமா பா.மு.பாஸ்கரன் வெற்றி பெற்ற மாணவர்களுக்குத் திருக்குறள் புத்தகம் மற்றும் சான்றிதழ்களை வழங்கி பாராட்டியதோடு பெண்கள் பாதுகாப்பு விழிப்புணர்வு பற்றி விரிவாகப் பேசினார். மாணவர்களிடையே திருக்குறள் தொடர்பான வினாடி வினா நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டது. செயலாளர் ஏ.கே.நடராஜன் வாழ்த்துரை வழங்கினார். நிகழ்ச்சியில் ஆசிரியர்களும் மாணவர்களும் பெருவாரியாகக் கலந்து கொண்டனர். இறுதியில் தமிழ் ஆசிரியர் நன்றி கூற விழா இனிதே முடிவுற்றது.



## திருவண்ணாமலை மாவட்டம்

திருவண்ணாமலை மாவட்டத்தில் உள்ள அனைத்து உயர்நிலைப் பள்ளிகள் மற்றும் மேல்நிலைப் பள்ளிகளின் தலைமை ஆசிரியர் கூட்டம் எஸ்.கே.பி பொறியியல் கல்லூரியில் 26.06.2024 அன்று நடைபெற்றது. மொத்தம் 205 தலைமை ஆசிரியர் கலந்து கொண்டார்கள். ஒவ்வொருவருக்கும் ஐந்து புத்தகங்கள் வீதம் நேரடியாகவே வழங்கப்பட்டது.

அந்தப் பள்ளியிலிருந்து மூன்று பிள்ளைகளை மட்டும் திருக்குறள் முற்றோதல் வகுப்பிற்கு வரும்படி செய்ய வேண்டும் என்று முதன்மைக் கல்வி அலுவலரும் திருக்குறள் திரு.காமராசு ஐயாவும் கேட்டுக் கொண்டனர்.



திருவண்ணாமலை நகராட்சி மாதிரி மகளிர் மேல்நிலைப் பள்ளியில் திருக்குறள் வகுப்பு, பள்ளி திறந்ததிலிருந்து தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.






திருவண்ணாமலை மாவட்டம், வடமாத்தூர் நடுநிலைப் பள்ளியில் திருக்குறள் வகுப்பு தொடங்கப்பட்டது.






# திண்டுக்கல் மாவட்டம்

50 நாட்களுக்கும் மேலாகத் தஞ்சை மருத்துவக் கல்லூரி மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு, இரண்டாவது கட்ட அறுவை சிகிச்சை செய்யப்பட்டு நலமுடன் திண்டுக்கல் திரும்பும் "திருக்குறள் திலகம்" பவிசா அவர்கள் அடுத்து வரும் அறுவை சிகிச்சைகளையும் வெற்றியுடன் எதிர்கொண்டு நலம் பெற்று பல்லாண்டு வாழ்ந்து குறள் நெறி பரப்ப வாழ்த்துகின்றோம்.

21.06.2024 அன்று மருத்துவமனையிலிருந்து விடுவிக்கப்பட்டு ஊர் செல்லும்முன் மாலை 5.00 மணியளவில் தஞ்சை திருக்குறள் முற்றோதல் பயிற்றகம் வந்து (காரில் இருந்து கீழே இறங்க இயலாத நிலையில்) கடவுள் வாழ்த்து அதிகாரம் கூறி திருவள்ளுவரை வணங்கிய போது மருத்துவர் செல்வி, முருகேசன் (கலிபோர்னியா திருக்குறள் திருமறை மன்ற ஒருங்கிணைப்பாளர்) அவர்கள் வழங்கிய மருத்துவ உதவிக்கான சிறு உதவித் தொகை ரூ.25000/– திருக்குறள் தூயர் அ.கோபிசிங் அவர்கள் மூலமாக பவிசாவின் தாயாரிடம் வழங்கப்பட்டது.



**திருக்குறளை 100 மொழிகளில் மொழி பெயர்க்க, செம்மொழி தமிழாய்வு நிறுவனம் தகுதியான நிபுணர்களை தேர்வு செய்ய உள்ளது.**

சென்னை பெரும்பாக்கத்தில் உள்ள செம்மொழி தமிழாய்வு மத்திய நிறுவனத்தில், சங்க இலக்கியங்கள் குறித்த ஆய்வுகள், உரைகள், கருத்தரங்குகள், பயிலரங்குகள், மொழிபெயர்ப்புகள் உள்ளிட்ட பணிகள் நடக்கின்றன.

அந்த வகையில், திருக்குறள் ஏற்கனவே 36 மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டு உள்ளது. மேலும், 20 மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு, விரைவில் வெளியிடப்பட உள்ளது. இந்நிலையில், மேலும் 100 மொழிகளில் மொழி பெயர்க்கத் திட்டமிடப்பட்டுள்ளது. இதற்கான நிபுணர்களுக்கு நிறுவனம் அழைப்பு விடுத்துள்ளது.

இதுகுறித்து, செம்மொழி நிறுவன இயக்குநர் சந்திரசேகர் கூறியதாவது: தற்போது, 55 இந்திய மொழிகள், 45 வெளிநாட்டு மொழிகளில் திருக்குறளை பெயர்க்கத் பெயர்க்க திட்டமிடப்பட்டுள்ளது. அதாவது, செய்யுள் வடிவிலோ, உரைநடை வடிவிலோ நேர்த்தியாக, 10 மாதங்களில் மொழிபெயர்க்க வேண்டும். ஒவ்வொரு மொழிக்கும், 1.50 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

மொழிபெயர்ப்பு திறமையும், தகுதியும் உள்ள வல்லுனர்கள், 'இயக்குனர், செம்மொழி தமிழாய்வு மத்திய நிறுவனம், செம்மொழி சாலை, பெரும்பாக்கம், சென்னை – 100' என்ற முகவரிக்கோ, tirukkuraltranslation@cict.in என்ற மின்னஞ்சல் முகவரிக்கோ விண்ணப்பிக்கலாம். மேலும் விபரங்களுக்கு, 'www.cict.in' என்ற இணையதளத்தைக் காணலாம்.

# சென்னை மாவட்டம்

16/06/24 ஞாயிற்றுக்கிழமை கேளம்பாக்கத்தில் திருவள்ளுவர் கல்வி மன்றம், தனது பத்தாவது ஆண்டு விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாடியது. பெருந்திரளாகத் தாய்மார்களும் குழந்தைகளும், ஒரு 20 விழுக்காடு ஆண்களும் கலந்து கொண்டார்கள். கிட்டத்தட்ட 250–300 பேர் கலந்து கொண்டு இருப்பார்கள் என்று நினைக்கின்றேன்.

அழைக்கப்பட்ட அனைவரும் வந்திருந்தார்கள் திரு ரவி சொக்கலிங்கம் சில காரணங்களால் வர இயலவில்லை மற்றபடி எல்லோருமே காலையிலேயே வந்திருந்து நிகழ்ச்சி முடியும் வரை, கிட்டத்தட்ட மாலை மணி 4:30, வரை அங்கே தான் இருந்தார்கள். சிறப்பான மதிய உணவு வடை கேசரியுடன் வழங்கப்பட்டது.

நற்றமிழ் இராமானுசன், பேராசிரியர் கு.மோனராசு, பேராசிரியர் அரங்கராசன், திருமதி. தாமரை, சண்முகசுந்தரம் (மூன்று தலைமுறையாகத் திருக்குறள் முற்றோதல் செய்த குடும்பம் 84 வயது),

இரவி வெங்கடாசலம் 86 வயது, ச பார்த்தசாரதி, சி இராஜேந்திரன் மற்றும் முற்றோதல் ஆசிரியர்கள் கோபிசிங், கற்பக வல்லி நிகழ்ச்சியில் கலந்து கொண்டவர்களில் அடங்குவர். ஊர்ப் பொதுமக்கள் திரளாகப் பங்கேற்றனர்.

பழனி குடும்பத்தினர் அதாவது அவருடைய துணைவியார் மற்றும் மகன் அவருடைய மைத்துனர் எல்லோரும் ஓடி ஓடி எல்லோரையும் கவனித்துக் கொண்டார்கள். நிகழ்ச்சியை ஒருங்கிணைக்க உறுதுணையாக நின்றார்கள். சிறிது கூட ஓய்வெடுக்காமல் அவரின் துணைவியார் நிகழ்ச்சிகளை ஒருங்கிணைப்பு செய்த விதம் பாராட்டுக்குரியது.

குழந்தைகள் எல்லோரும் துடிப்போடு எல்லா நிகழ்ச்சிகளில் பங்கெடுத்துக் கொண்டார்கள். நன்றாக நிகழ்ச்சிக்காக தங்களை ஆயத்தப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள் என்பது தெரிந்தது. மிகச் சிறப்பாக வடிவமைக்கப்பட்ட நிகழ்ச்சி. நேர மேலாண்மை மிக நன்றாகத் திரு, பழனி செய்தார்.

பழனியின் பல நாள் உழைப்பு விழாவின் வெற்றியில் தெரிந்தது.









# மதுரை மாவட்டம்

## திருக்குறள் உரை நூல்கள் வெளியீடு

பேராசிரியர் அருணன் எழுதிய திருக்குறள் உரை நூல்கள் வெளியீடு மதுரை உலகத் தமிழ்ச் சங்கத்தில் மதுரை சமணர் பண்பாட்டு மன்றம் சார்பில் நடைபெற்றது.

இதுவரை வந்த உரையாசிரியர்கள் எழுதியவற்றிலிருந்து முற்றிலும் மாறுபட்டு திருக்குறள் அடிப்படையில் ஒரு சமண அறநூலே என நிறுவுகிறார் அருணன்.

உலகம் தழுவிய மானுடத்தை நெறிப்படுத்தும் பொதுவான சிந்தனைகள் நிரம்ப இருந்தபோதிலும் குறள் சமணம் சார்ந்தே எழுதப்பட்டுள்ளதைத் தன்னுடைய ஆய்வுரைகள் மற்றும் விளக்கங்களின் வாயிலாக இதில் உறுதிப்பட மெய்ப்பிக்கிறார் நூலாசிரியர்.

படிக்க வேண்டிய தனித்துவமான உரைநூல்.





# சேலம் மாவட்டம்

சேலம் மாவட்டம் ஆத்தூர் அருகே அமைந்துள்ளது கோவிந்தம் பாளையம் கிராமம். இந்தக் கிராமத்தில் உள்ள அரசு தொடக்கப் பள்ளியில் 120 மாணவ–மாணவிகளும், உயர்நிலைப் பள்ளியில் 192 மாணவ–மாணவிகளும் படிக்கின்றனர். இந்த மாணவ–மாணவியரைத் திருக்குறளை மனப்பாடம் செய்ய வைத்து, தமிழ்ப் பற்றும் ஒழுக்கமும் வளரச் செய்யும் முயற்சியில் கோவிந்தம்பாளையம் மக்கள் ஈடுபட்டுள்ளனர்.

தமிழகத்திலேயே முன்னோடியான இத்திட்டத்தை ஊக்குவிக்கும் முயற்சியில் கோவிந்தம் பாளையம் ஊர் மக்களோடு, பள்ளி யின் முன்னாள் மாணவர்கள், ஆசிரியர்கள் மற்றும் அஞ்சல் துறையினரும் கைகோர்த்துள்ளனர். இந்தத் திட்டத்தின் பெயர் 'திருக்குறள் சார் அஞ்சலகத் சிறுசேமிப்பு'. இந்தப் பள்ளியில் 10–ம் வகுப்பு வரை படிக்கும் மாணவ–மாணவிகளுக்கு இலவசமாகத் திருக்குறள் புத்தகம் வழங்கப்பட்டு, ஒவ்வொருவரின் பெயரிலும், திருக்குறளின் மொத்த• அதிகாரங்களின் கணக்குப்படி ரூ.133 செலுத்தி புதிய அஞ்சலகக் கணக்கு தொடங்கப்பட்டுள்ளது. ஒரு திருக்குறள் ஒப்புவித்தால் ஒரு ரூபாய் வீதம், மாணவரின் சிறுசேமிப்பு கணக்கில் சேர்க்கப்படும். குறைந்தபட்சம் 50 திருக்குறள் ஒப்புவிக்கும் மாணவ–மாணவியர்கள் கணக்கில் வாரம்தோறும், அவர்கள் ஒப்புவித்த குறளுக்கு ஏற்ப தொகை செலுத்தப்படும். 1330 குறள்களையும் ஒப்புவிக்கும் மாணவர்களுக்கு, கோவிந்தம்பாளையம் கிராம மக்கள் சார்பில், சிறுசேமிப்பு கணக்கில் ரூ.10,000 செலுத்தப்பட உள்ளது. இது தவிர மாநிலம் முழுவதும் நடக்கும் திருக்குறள் போட்டிக்கு, கிராம மக்கள் சார்பில், மாணவ– மாணவியரை அனுப்பி வைக்கவும் உள்ளனர்.

திருக்குறள் சார் சிறுசேமிப்பு திட்டத் தொடக்க விழா 18–ம் தேதி நடைபெற்றது. இதுகுறித்து பள்ளித் தலைமை ஆசிரியர் (பொறுப்பு) வி.அழகுவேல் கூறியதாவது:

திருக்குறளைப் படிக்கும் போதே ஒவ்வொரு மாணவ, மாணவிக்கும் ஒழுக்கம் தானாக வரும். இந்தத் திட்டத்தில் சேர பள்ளி மாணவ–மாணவிகள் ஆர்வமுடன் திருக்குறளை மனப்பாடம் செய்து வருகின்றனர். இந்தப் பள்ளியின் முன்னாள் மாணவர்களும், ஊர் மக்களும் இந்தத் திட்டத்தில் மிகுந்த ஆர்வம் காட்டி வருவது வரவேற்கத்தக்கது. இதற்கான செலவுகள் அனைத்தையும் ஊர் மக்கள் சார்பாக வழங்கப்படுகிறது.

# திருக்குறள் நிகழ்வுகள்

## எழுநிலை மாடத்தின் ஏற்றமிகு திருக்குறள்

தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகம்
தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்
மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச் சங்கம்
திருக்குறள் உயராய்வு மற்றும் ஆராய்ச்சி மையம்
திருவள்ளுவர் இருக்கை
இணைந்து நடத்தும்

**திருக்குறள் ஆய்வரங்கம் –28**

நிகழும் திருவள்ளுவராண்டு 2055 ஆனித் திங்கள் 06–ஆம் நாள்
(20–06–2024)வியாழக் கிழமை அன்று இரவு 7 மணி முதல் 8.30 மணி வரை
இணைய வழியில் நடைபெற உள்ள
திருக்குறள் ஆய்வரங்கம் –28

பேராசிரியர் முனைவர் சோ.ஆறுமுகம்
துணைவேந்தர், தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக் கழகம், சென்னை
தலைமையுரை வழங்கவும்,

திருமிகு சி. இராஜேந்திரன் இ.வ.ப.
மேனாள் முதன்மை ஆணையர்,சுங்கம்&கலால் வரி இந்திய அரசு
நிறுவன ஒருங்கிணைபாளர் ,வள்ளுவர் குரல் குடும்பம்,
சென்னை.

எழுநிலை மாடத்தின் ஏற்றமிகு திருக்குறள்
என்னும் பொருண்மையில்

சிறப்புரை ஆற்றவும் இசைவு அளித்துள்ளார்கள்
இவ்விழாவில் பங்கேற்க அனைவரையும்
அன்புடன் அழைக்கின்றோம்.

கலைமாமணி முனைவர் சேயோன்
நிறுவனச் செயலாளர்,
மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச் சங்கம்,
திருவள்ளுவர் இருக்கை,
தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகம், சென்னை.

முனைவர் சு. பாலசுப்பிரமணியன்
இயக்குநர்,
தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்,
தமிழ்நாடு திறந்த நிலைப்
பல்கலைக்கழகம், சென்னை–15.

**திருக்குறள் ஆய்வரங்கம் –28**

நாள்: 20–06–2024,வியாழக் கிழமை நேரம்: இரவு 7 மணி

நிகழ்ச்சி நிரல்

வரவேற்புரை :
பேரா.முனைவர் சு.பாலசுப்பிரமணியன்
இயக்குனர் தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்,
தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகம், சென்னை–15

தலைமை உரை :
பேரா.முனைவர் சோ.ஆறுமுகம்
துணைவேந்தர்,
தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகம், சென்னை.

வாழ்த்துரை :
முனைவர் கு.இரா.செந்தில்குமார்
பதிவாளர், தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகம், சென்னை–15.

சிறப்புரை திருமிகு. சி. இராஜேந்திரன் இ.வ.ப.
மேனாள் முதன்மை ஆணையர்.சுங்கம்&கலால் வரி இந்திய அரசு
நிறுவன ஒருங்கிணைபாளர், வள்ளுவர் குரல் குடும்பம், சென்னை.
பொருள்: எழுநிலை மாடத்தின் ஏற்றமிகு திருக்குறள்

நன்றியுரை :
முனைவர் மு. வையாபுரி
உதவிப் பேராசிரியர், தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்,
தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகம், சென்னை–15.

நிகழ்ச்சி அமைப்பு:
கலைமாமணி முனைவர் சேயோன்
நிறுவனச் செயலாளர்,
மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச் சங்கம், சென்னை.

Join Zoom Meeting
zoom
https://us02web.zoom.us/j/3562722898?pwd=MnczcmM0MlM5WjhDOUNVcC9mRW9HQT09
Meeting ID: 356 272 2898
Password: mtsacademy

யாழ் கல்வியகம்

YAZH

அறம் பொருள் இன்பம்

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

சித்திரைத் திருநாளை முன்னிட்டு
அமீரகத்தில் இரண்டாம் ஆண்டாக....

யாழ் கல்வியகம் நடத்தும்

# திருக்குறள் திருவிழா

DIAMOND SPONSOR

SRM INTERNATIONAL REAL ESTATE LLC

GOLD SPONSOR

Ammas Restaurant L.L.C Since 2004

ASSOCIATE SPONSOR

STF

STALLS

Routes of Dubai

MOON SKY Travel & Tourism

FARM BASKETS

GELTOY

HOLISTIC NRI

SILVER SPONSOR

flavory

KAIZZEN PLUS

Gover

COMMNET

FEDERATION OF ECONOMIC DEVELOPMENT ASSOCIATION
The Voice Of Economic Development

THE RISE

Eduzcope Intelligence

SMART GAS

PRECISION METAL INDUSTRIES FZC

MEDIA PARTNER

தினத்தந்தி

மின்னல்

யாழ் கல்வியகத்தின் இந்த கல்வியாண்டு 2024-25 புதிய மாணவர் சேர்க்கைக்கான விண்ணப்ப படிவம்

இடம்:
GEMS Wellington International school, Al Sufouh, Dubai, UAE.

நாள்:
04 மே 2024
(சித்திரை 21)
சனிக்கிழமை

நேரம்:
மாலை 3.00 முதல் 8.00 மணி வரை

0555241536 / 0529962234
www.yazhkalviyagam.com
info.yazh@gmail.com

வாருங்கள்
வள்ளுவன் தமிழை மழலையரின் கொஞ்சும் தமிழில் கேட்போம்...

---

# வாசிங்டன் வட்டாரத் தமிழ்ச்சங்கம்

Tamil Sangam of Greater Washington (Inc.)
(A registered, Non-Profit, Tax Exempt 501(c) (3) Organization)

## நூல்நயம் – குழு
(புத்தகம் படித்துப் பகிர்வோம்)
இணைந்து வழங்கும்

## திருக்குறள் கருத்தரங்கம்

வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று - குறள்
(The life that cherishes strangers each day Never falls upon ruin)

சிறப்பு விருந்தினர்

தாமஸ் ஹிடோஷி ப்ருக்ஸ்மா

கலந்துரையாடல்

திருக்குறள் சார்ந்த சிற்றுரைகள், பதாகைகள், கதைகள், இசைப்பாடல்கள், வீடியோ விளையாட்டுகள், சின்னஞ்சிறு நாடகங்கள், கவிதைகள் ஓவியங்கள், மற்றும் பலவகை ஆக்கங்கள்

Date: June 2nd 2024, Time: 11.30 AM to 5:30 PM
Venue: Walter Johnson Highschool, Bethesda

11.30 முதல் 12.30 வரை உணவு வழங்கப்படும்.

பங்குபெறும் பிள்ளைகளுக்கு சிறப்புப் பரிசுகள்
திரு. தாமஸ் ஹிதோஷி ப்ருக்சிமா அவர்கள்
கையெழுத்துடன் அவரின் நூல்கள்

www.washingtontamilsangam.org

இது நமது தமிழ்ச்சங்கம்! நாம் அனைவரும் அதன் அங்கம்!!

tsgwdc | tsgwdc TamilSangamGW www.tsgwdc.org

# திருக்குறள் இன்னும் உலக அலுவல் மொழிகளில் எத்தனை மொழிகளில் மொழிபெயர்க்கப்படவேண்டும்?







உலக மொழிகளில் திருக்குறள் தொகுப்புத் திட்டத்தின் முதல் பகுதி (Nov 2018 – Mar 2024) முடிந்து இரண்டாம் பகுதி "திருக்குறள் 2030" தொடங்குகிறது.

முதல் பகுதியில் இக்குழு என்ன செய்து முடித்துள்ளது?

1) திருக்குறள் மொழிபெயர்ப்பு விவரங்களை முழுமையாகத் தொகுத்து மொழிபெயர்ப்பு வரலாற்றுத் தரவுகளை உறுதிசெய்தல்.
2) அச்சுப்பிரதிகளை உலக நாடுகளிலிருந்து சென்னைக்கு வரவழைத்துத் தொகுத்தல்.
3) அனைத்து விவரங்களையும் அச்சிட்டு நூலாக வெளியிடுதல். ஒவ்வொரு ஆண்டும் புதிய மொழிபெயர்ப்பு விவரங்களைச் சேர்த்துத் தொடர்ந்து இந்நூலை நம்பகமாக, ஒருங்கிணைந்த ஆய்வு அடங்கலாக வெளியிடுதல்.

இரண்டாம் பகுதியில் உலகத் தமிழர்கள் என்ன செய்யவிருக்கிறோம்?

1) நீங்கள் வசிக்கும் நாட்டின் மொழியில் திருக்குறள் மொழிபெயர்ப்பு உள்ளதா? – அதைப் பரவலாக்க, பயன்பாட்டுக்குக் கொண்டுவர என்ன செய்யவேண்டும் என்று சிந்திப்போம்.
2) நீங்கள் வசிக்கும் நாட்டின் மொழியில் திருக்குறள் மொழிபெயர்ப்பு இல்லையா, மொழிபெயர்க்க என்ன செய்யவேண்டும்? சிந்திப்போம்.

உங்கள் நாடுகளில் இதுகுறித்து எங்களோடு சேர்ந்து சிந்திக்கத் தொடர்புகொள்க.

நாம் இன்னும் மொழிபெயர்க்கவேண்டிய உலக நாடுகளின் அலுவல் மொழிகளின் எண்ணிக்கை: 158

முழுவிவரங்களும் இடம்பெற்றுள்ள "Thirukkural Translations in World Languages" நூலைப்பெற https://estore.valaitamil.com/

# திருக்குறள் நூல்கள்

30/06/2024 அன்று ஆவடி, முத்தமிழ் மன்றம் மற்றும் எழில் இலக்கியப் பேரவைத் தலைவர் முனைவர். எழில் சோம பொன்னுசாமி ஐயா அவர்கள் பதினைந்து ஆண்டுகள் ஆய்வு செய்து மதுரையில் திருக்குறள் அரங்கேற்றம் செய்த நிகழ்வை நாடகம் வடிவில் எழுதி புத்தகமாக வெளியிட்ட நிகழ்வு இன்று நடைபெற்றது.

பள்ளிகள் மற்றும் கல்லூரிகளில் திருக்குறள் பேரவை நிகழ்வில் நடந்த இந்த நூல் நாடகம் நடத்த நடத்தச் நூலாக அமைகிறது.



செந்தமிழே உயிரே நறுந்தேனே! செயலினை மூச்சினை உனக்களித்தேனே! - பாவேந்தர்.

# எழில் இலக்கியப் பேரவை

பதிவு எண் : 50/2019

மலேசியா எஸ்.பழனிவேல் நினைவு அறக்கட்டளை இணைந்து நடத்தும்

எண்:17, சரசுவதி நகர், இரண்டாவது தெரு, ஆவடி, சென்னை-54.

அலைபேசி : 7010612880, 93450036

## திரு. தி.புவனேஷ்ராம் I.A.S., அவர்களுக்குப் பாராட்டு விழா

## திரு. எழில் சோம பொன்னுசாமி அவர்களின் "திருக்குறள் நூல் அரங்கேற்றம்" நூல் வெளியீட்டு விழா

## 106வது கவியரங்கம்

நாள் : 30.06.2024 ஞாயிற்றுக்கிழமை காலை 9.30 மணி, தி.ஆண்டு 2055, ஆடவை 16 , இடம் : முத்தமிழ் மன்றம், கோயில் பதாகை , ஆவடி, சென்னை - 62.

**நிகழ்ச்சி நிரல்:**

தமிழ்த்தாய் வாழ்த்து : அனைவரும்

வரவேற்புரை : கவிஞர். மா.உதயகுமார்

நிகழ்ச்சித் தலைமை : முனைவர். எழில்.சோம.பொன்னுசாமி

நூல் வெளியிடுபவர் :
திரு. தி.புவனேஷ்ராம் I.A.S., அவர்கள்

நூல் பெற்று வாழ்த்துரை :
பாவலர். சு.சண்முக சுந்தரம், இ.வ.ப., அவர்கள்
உதவி ஆணையர், சுங்கத்துறை, கடலூர் கோட்டம்.

முன்னிலை :
முனைவர். ஜார்ஜ் மரியண்ணன்
சிலம்பிசைப்பாவலர். வே.முனுசாமி எம்.ஏ.,

கவியரங்கத் தலைமை :
முனைவர். ர.கண்ணகி அவர்கள்

கவியரங்கத் தலைப்பு :
**என்ன செய்யப் போறிங்க...?**

கவியரங்கை நெறிபடுத்துபவர் :
வெண்பாச்சுடர் வெ.நாதமணி

நன்றியுரை :
சிந்தனைக் கவி. சு.சங்கர்

நிகழ்ச்சித் தொகுப்பு
கவி.தங்க. ஆரோக்கியதாசன்

விருந்தோம்பல்
சந்தக் கவி.கோ.பூமணி கவிஞர்.அனுசுயா கவிஞர்.பிரியங்கா பாரதி

**தமிழன்புடன் அழைக்கிறோம்**

முனைவர் எழில்.சோம. பொன்னுசாமி (தலைவர், எழில் இலக்கியப் பேரவை) · சிலம்பிசைப் பாவலர் வே.முனுசாமி (செயலாளர், எழில் இலக்கியப்பேரவை) · கவிஞர் மா.உதயகுமார் (ஆலோசகர் எஸ்.பழனிவேல் நினைவு அறக்கட்டளை)

குறளாய்வறிஞர் பொன். இனியன் · கவி.தங்க.ஆரோக்கிய தாசன் (பொருளாளர், எ.இ.பே) · திருமிகு மா.இராமச்சந்திரன் (செயலாளர், எஸ்.பழனிவேல் நினைவு அறக்கட்டளை)



# நவில்தொறும் நூல்நயம்

கற்க கசடற
karka.in
வள்ளுவர் குரல் குடும்பம்
ValaiTamil.com
இணைந்து வழங்கும்

நவில்தொறும் நூல்நயம் நிகழ்வு 69

பாமரருக்கும் பரிமேலழகர்

நூலாசிரியர்
திரு சி. இராஜேந்திரன் IRS (ப/நி)
நிறுவுநர் – ஒருங்கிணைப்பாளர்
வள்ளுவர் குரல் குடும்பம்

Zoom ID: 988 6476 9563 Passcode: 1330

நயவுரை வழங்குபவர்
இலக்கியச் செம்மல்
பேராசிரியர்
வன்மீக. வெங்கடாசலம்

28-06-2024
மாலை:
6.30 - 7.45

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
Watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

கற்க கசடற
karka.in
வள்ளுவர் குரல் குடும்பம்
ValaiTamil.com
இணைந்து வழங்கும்

நவில்தொறும் நூல்நயம் நிகழ்வு 67

டாக்டர் வள்ளுவர்

திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

டாக்டர் வள்ளுவர்
வள்ளுவம் சொல்லும்
வாழ்வியல் மருத்துவம்

நூலாசிரியர்
மருத்துவர் எஸ். முருகுசுந்தரம்.
தோல்நோய் மருத்துவர், சென்னை

Zoom ID: 988 6476 9563 Passcode: 1330

நயவுரை வழங்குபவர்
பொறிஞர். இரா. கதிரவன்
எழுத்தாளர், 'முதல்மொழி' – ஆசிரியர் குழு உறுப்பினர்
சென்னை

14-06-2024
மாலை:
6.30 - 7.45

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
Watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

கற்க கசடற
karka.in
வள்ளுவர் குரல் குடும்பம்
ValaiTamil.com
இணைந்து வழங்கும்

நவில்தொறும் நூல்நயம் நிகழ்வு 68

நிழல் காட்டும் நிஜங்கள்

திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

நிழல் காட்டும்
நிஜங்கள்

நூலாசிரியர்
திருமதி க. மலர்க்கொடி இராஜேந்திரன் M.A.,

Zoom ID: 988 6476 9563 Passcode: 1330

நயவுரை வழங்குபவர்
திரு. சோம இளங்கோவன்
கணினிப் பொறியியல்

21-06-2024
மாலை:
6.30 - 7.45

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
Watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

# திருக்குறள் 2030 – நிலை 2

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் முதல் கட்டப் பணிகள் நிறைவடைந்து இரண்டாம் கட்டப்பணிகள் தொடங்குகிறது.




# தேடப்படும் திருக்குறள் அச்சு நூல்கள்

**TRANSLATIONS HARD COPIES IN OUR GLOBAL SEARCH LIST**

1. Czech
2. Dutch
3. Finnish
4. Italian
5. Garo
6. Konkani
7. Russian
8. Santali
9. Spanish
10. Swahili

திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள்

மாணவர் பெயர் | நாடு Select | மாநிலம் Select | SEARCH

பதிவு செய்ய

| # | மாணவர் எண் | பெயர் | நாடு | மாநிலம் | மாவட்டம் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|
| 1. | 331 | ச.கோபிகா | India | Tamil Nadu | tiruchirappalli | 2022 |
| 2. | 330 | மு. நிஷார்னியா | India | Tamil Nadu | thanjavur | 2022 |
| 3. | 329 | க. சந்தான லட்சுமி | India | Tamil Nadu | kanyakumari | 2022 |
| 4. | 328 | சு.சுசாந்திகா | India | Tamil Nadu | viluppuram | 2015 |
| 5. | 327 | சு.சுசாந்திகா | India | Tamil Nadu | viluppuram | 2015 |
| 6. | 326 | ர. செஞ்சோலை | India | Tamil Nadu | viluppuram | 2022 |
| 7. | 325 | ஸ்ரீ .ஸ்ரீ வர்ஷன் | India | Tamil Nadu | nagapattinam | 2022 |
| 8. | 324 | சீ. யாழ்த்தமிழ் | India | Tamil Nadu | viluppuram | 2022 |
| 9. | 323 | டே.ஜான் டேவிட் | India | Tamil Nadu | kanyakumari | 2022 |
| 10. | 322 | இரா.ராஜ்குமார் | India | Tamil Nadu | theni | 2015 |



## இதுவரை உலக அளவில் திருக்குறளை முழுமையாகப் படித்து முற்றோதல் செய்துள்ளவர்கள் யார்? ஆவணப்படுத்தப் புதிய இணையதளம்..

2000 வது ஆண்டில் திருக்குறள் முற்றோதல் செய்யும் மாணவர்களுக்குப் பரிசுத் தொகை வழங்கும் திட்டத்தை அரசு தொடங்கியது. கடந்த 23 ஆண்டுகளில் தமிழ்நாடு முழுதும் சுமார் 812 பேர் 1330 திருக்குறளையும் கூறி பரிசு பெற்றுள்ளார்கள் என்று தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் முனைவர்.அவ்வை அருள் தெரிவித்துள்ளார். 14.04.1972 முதல் இயங்கிவரும் திருச்சி திருமூலநாதன் அறக்கட்டளை 01.05.1998 முதல் 26 ஆண்டுகளாக திருக்குறள் ஒப்பிடுதல் போட்டியை நடத்திவருகிறது. அவர்கள் வழங்கும் 2000 ருபாய் பரிசைப் பெற்றவர்கள் 400 பேருக்கு மேல் உள்ளனர். இதுபோல் வேறு அமைப்புகளும் செய்துகொண்டிருக்கலாம். அமெரிக்கா உள்ளிட்ட வெளிநாடுகளில் முற்றோதல் செய்தவர்கள் பலர் உள்ளனர்.

இவர்களை ஒரு குழுமமாக தொகுத்து வெளியிடுவதும், இவர்களுக்கு அனைத்திலும் தமிழ்ச்சமூகம் கல்வி, வேலைவாய்ப்பு, மேடைவாய்ப்பு, பொருளாதார வாய்ப்பு, தொழில் உள்ளிட்ட அனைத்திலும் முன்னுரிமை வழங்கவும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் ஒரு சிறப்பு இணையதள வசதியை ஏற்படுத்தி ஆவணப்படுத்தி வெளியிடுகிறது. உங்களுக்குத் தெரிந்தவர்களைப் பதிவு செய்ய இங்குச் செய்யவும்.

முதல்கட்டமாக இவர்கள் அனைவர்க்கும் உலகத்திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் திருக்குறள்-இளநிலை சான்றிதழ் வழங்கி, பொருள் உணர்ந்து படித்துள்ளவர்களை அடையாளம் கண்டு திருக்குறள்-முதுநிலை சான்றிதழ் வழங்கவிருக்கிறோம். இளநிலை முடித்தவர்கள் , முதுநிலை படிக்க ஊக்குவிக்கப்படுகிறார்கள்.

https://www.valaitamil.com/mutrothal-students-register-list.php

or www.Thirukkural.ValaiTamil.com

# உலகெங்கும் திருக்குறள் பரப்பும் மாத இதழ்




**விளம்பர ஆதரவுக்கு**

முழு பக்கம் வண்ணம் - ரூ. 10000/- மாதம்
அரை பக்கம் வண்ணம் - ரூ. 5000/- மாதம்

E-mail : kuralvazhi@gmail.com
Phone : +91 73055 71897




**திருக்குறளுக்கான ஒருங்கிணைந்த உலகத் தகவல்களுடன் வரும் "குறள் வழி" மாத இதழ் உங்களுக்குப் பிடித்திருக்கிறதா? தொடர்ந்து வர துணைநிற்க ஆர்வமா? ஒரு முழுநேர ஆசிரியர் குழுவைக் நியமித்து தரப்படுத்திக் கொண்டுவர உங்கள் நிறுவனம், அமைப்பு சார்ந்த விளம்பரம் கொடுத்து உதவலாமே...**

To see all the Magazine



www.KuralWorld.org

"குறள் வழி" மாத இதழ் என்ன செய்கிறது?

- தமிழ்நாடு, பாண்டிச்சேரியில் அனைத்து மாவட்டங்களில் நடக்கும் திருக்குறள் படிக்கும் மாணவர்களை ஊக்கப்படுத்தி திருக்குறள் சார்ந்த செயல்பாடுகளை, பரப்புரை நிகழ்வுகளை இணையத்திலும், இதழிலும் தொகுத்து வெளியிடுகிறது..
- பிற தலைப்புகளைத் தொடாமல் திருக்குறள், திருக்குறள் நூல்கள், திருக்குறள் வரலாறு, திருக்குறள் நிகழ்வுகள், திருக்குறள் ஆய்வுகள், திருக்குறள் ஆளுமைகள், திருக்குறள் ஆர்வலர்கள், திருக்குறள் சார்ந்த வாழ்வியல் முன்னெடுப்புகள், உலகத் திருக்குறள் நிகழ்வுகள் என்று மட்டும் கவனம் செலுத்தும் இதழ்.

# திருக்குறள் புரவலர்களுக்கு நன்றி...

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்திற்கு ஒரு தமிழ்ப் பேராசிரியரைத் தொடக்கத்தில் பகுதி நேரமாகவும், தேவையானால் முழு நேரமாகவும் வழங்கி, "குறள் வழி" திருக்குறள் மாத இதழ் அட்டைப்பட விளம்பரமாக மாதம் ரூபாய் 10000 வழங்கி ஆதரவு அளிக்கும் வள்ளுவர் அறிவியல் மற்றும் மேலாண்மைக் கல்லூரிக்கும், அதன் தாளாளர் திரு.செங்குட்டுவன் அவர்களுக்கும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சார்பாக மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.





இவ்விதழ் மாவட்ட ஒருங்கிணைப்பாளர்கள், பயிற்சியாளர்களுக்கு அச்சுப்பிரதியாக இலவசமாகச் சென்று சேரவேண்டும் என்று புரவலராகத் தன்னை இணைத்துக்கொண்ட நாமக்கல் நண்பர் திரு.கதிரவன் செழியன் அவர்களுக்கு உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். நன்றி... நன்றி...



# புதிய இணையதளம் தொடக்கம்

## www.KuralWorld.org



உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்



அறிமுகம்



பயிற்சியாளர்கள்



திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள்

திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள்




பயிற்சிக்கு பதிவுசெய்ய



வெளிநாட்டுப் பொறுப்பாளர்கள்

வெளிநாட்டுப் பொறுப்பாளர்கள்



இலவசத் திருக்குறள் நூல்கள் வழங்கும் திட்டம்



மாவட்டக் கிளைகள்




குறள் வழி - மாத இதழ்




திருக்குறள் உரைகள்




திருக்குறள் மறையோதல்



திருக்குறள் பதிப்பகம்




திருக்குறள் போற்றி



திருக்குறள் பயிற்சி ஒலி வடிவில் – உச்சரிப்புக்கு

திருக்குறள் ஒலி வடிவில்



திருக்குறள் விளக்கக் காணொளிகள்

திருக்குறள் விளக்கக் காணொளிகள்